23rd August 1961]

இரண்டு மாதங்களுக்கு ஒரு தடவை ரிஜிஸ்ட்ரேஷனைப் புதுப்பித்துக் கொள்வதென்றால் பெரிய சிரமம் இருக்கிறது. ஆகவே, தயவு செய்து, இரண்டு மாதங்களுக்கு ஒரு தடவை என்பதற்கு பதிலாக ஆறு மாதங்களுக்கு ஒரு தடவை என்ற யோசனையைச் சர்க்கார் மீண்டும் பரிசீலனை செய்யுமா ?

DEPUTY SPEAKER : The Hon. Minister has already answered a similar question.

**Sri A. V. P. ASAITHAMBI :** தலைவர் அவர்களே, பதிவு செய்து கொண்டிருந்தாலும் வேலை கிடைக்காமலிருக்கும்போது, அப்படிப்பட்டவர்களுக்கு வேலை கிடைக்கும் காலம் வரைக்கும் ஏதாவது ஒரு உதவித் தொகை கொடுக்கக் கூடிய முறையில் பல நாடுகளில் திட்டம் இருக்கிறதே, அதுபோன்று நம் நாட்டிலும் திட்டம் உண்டா ? வயதானவர்களுக்கு உதவித் தொகை கொடுக்க அரசாங்கம் இப்பொழுது ஏற்பாடு செய்திருப்பதாகத் தெரிகிறது. அது மாதிரி, வேலையற்றவர்களுக்கு முதலில் பண உதவி செய்து விட்டு, பின்னால் வேலை பெறுகிறபோது வசூலித்துக் கொள்ளும் அளவுக்குத் திட்டம் வகுக்க அரசாங்கம் முன்வருமா ?

**The Hon. Sri R. VENKATARAMAN :** அந்தத் திட்டம் கூட செய்ய வேண்டியது அவசியம் தான். நம்முடைய ராஜ்யத்தின் நிதி நிலை சரியாக அந்த அளவு வரும்போது நிச்சயமாக இந்த சர்க்கார் அதை ஏற்றுக்கொள்ளும்.

Sri M. WILLIAM : Is there any local committee in the Kanyakumari district? If not, may I know the reason?

The Hon. Sri R. VENKATARAMAN : A separate question may be put, Sir.

*Palar Porandalar Scheme*

* 1363 *Q.*—Sri M. D. THIAGARAJA PILLAI (on behalf of Sri N. R. THIAGARAJAN) : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா?

மதுரை ஜில்லா பழநி தாலுக்கா பாலாறு பொருந்தலாறு திட்டம் இந்த ஆண்டு வேலை துவக்கப்படுமா?

The Hon. Sri P. KAKKAN : The matter is under the consideration of Government.

*Bus permits (marking system)*

* 1364 *Q.*—**Sri R. SRINIVASA IYER (on behalf of Sri A. VEDARATHNAM) :** கனம் மின்சார அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பஸ் பர்மிட்டுகளுக்கு முன்உரிமை வழங்கும் மார்க்கு திட்டம் எந்த அடிப்படையில் கணக்கிடப்படுகிறது?

(இ) இந்த முறையில் உள்ள அனுகூலமென்ன?